அங்கு 20, 25 நாட்களாக தண்ணீர் இல்லாமல் இருந்தது என்ற புகார் அரசாங்கத்திற்கு வந்ததா ? அதன் மேல் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI P. KAKKAN: அதிகமான தண்ணீர் வீணுக சமுத்திரத்தில் விழுவதால் மேட்டூரில் உள்ள தண்ணீரை அய்யன் பெரு வாலே சானல் மூலமாக தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வருகிறது. கழிந்த அதாவது 1957 நவம்பர் மாதத்தில் ஒரு வாரம் இந்த மாதிரியான நிலை ஏற்பட்டது என்று தெரியவருகிறது. இவ்விதம் ஏற்படாமல் இருக்க க்ராயன் கட்டி சப்ளை செய்வதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

## *Gramdhan villages*

* 401 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எந்தெந்த ஜில்லாக்களிலே எத்தனை கிராமதான கிராமங்கள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை கிராமதான கிராமங்களிலே சர்வோதயக் கூட்டுறவு சொஸைடிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன ?

(இ) கிராமதான கிராமங்களிலிருக்கும் விவசாயிகளுக்கு என்னென்ன வசதிகள் செய்து கொடுக்க அரசாங்கம் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) The particulars are given in the statement[a] placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், இதற்கு கொடுக்கப்பட்டிருக்கின்ற ஜாபிதாவில் 9 சர்வோதய கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு 4,73,963 ரூபாய் கடனுக வழங்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் கொடுக்கப்பட்டிருக்கும் கடன் கள் நீண்டகால தவணைகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதா அல்லது குறுகிய கால தவணைகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில குறுகிய கால தவணைகளாக கொடுக்கப்படும், சில நீண்டகால தவணைகளாக கொடுக்கப்படும், சில மத்திய கால தவணைகளாக கொடுக்கப்படும். இது அந்தந்த கடன்களை பொறுத் திருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த கிராமதான சர்வோ தய கூட்டுறவு முறையில் நடைபெறும் வேலைகள் எல்லாம் திருப்திகரமான முறையில் நடந்து வருகின்றதா ? அரசாங்கம் செலவு செய்யக்கூடிய பணங் கள் எல்லாம் திருப்திகரமான முறையில் செலவு செய்யப்படுகின்றனவா, அல்லது திருப்தி இல்லாத முறையில் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றனவா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதுதான் இந்த சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்றிரண்டு வருடங்கள் கழிந்த பின் தான் அதைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல முடியும்.

SRI V. SUBBIAH : ஸார், கிராமதான சர்வோதய முறையில் வாலாந்தூர் என்ற இடத்தில் நடைபெற்றுக்கொண்டிருந்த கூட்டுறவுப் பண்ணை சீர்கெட்டுப்போனதற்குக்காரணம் அதிகாரிகளுடைய தலையீடா, அல்லது அரசாங்கத்தினுடைய அசிரத்தையா என்பதை அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி தனியாக கேள்வி போடவேண்டும்.

[a] Printed as Appendix II on page 487 infra.

[22nd September 1958

**Sri A. VEDARATHNAM:** ஸார், கிராமதானம், பூதானம் இவைகள் எல்லாம் இப்போது அச்சிடப்பட்ட பத்திரங்களில வழங்கப்பட்டிருக்கின்றன. ஆனால் பூதான சட்டப்பிரகாரம் ரெஜிஸ்டர் செய்யவேண்டும். ஆகவே இதற்கு செலவு செய்யாமல் ரெஜிஸ்டர் செய்வதற்கு, சட்டபூர்வமாக அங்கீகரிக்கப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** Sir, I do not think this supplementary arises out of the main question. If the hon. Member is interested, he may put a separate question.

**Sri S. NAGARAJA MONIGAR:** ஸார், இப்போது தானமாக கொடுக்கக் கூடிய கிராமங்கள், தானமாக கொடுத்த பின் யாருடைய சுவாதீனத்தில் அல்லது யாருடைய மேற்பார்வையில் இருந்து வருகிறது என்பதைக் கூற முடியுமா ? இவ்விதம் தானம் கொடுத்தவர்கள் கையிலேயே திரும்பவும் கிராமங்கள் இருந்து வருவது சர்க்காருக்குத் தெரியுமா ? சர்க்கார் இப்படிப் பட்ட கிராமங்களுக்குப் பொறுப்பு எற்குமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** சர்க்காருக்கு இதில் நேரடியாக பொறுப்பு கிடையாது. கிராமதானம் கொடுப்பது அந்த கிராமத்திலுள்ள மக்களுக்குத்தான். ஆதலால் சில கிராமங்கள் மக்களுடைய பொறுப்பில் தான் இருந்து வருகிறது. சர்க்கார் இந்த கிராமங்களில் நல்ல முறையில் விவசாயங்களைச் செய்வதற்கும், கூட்டுறவு சங்கங்களை நடத்துவதற்கும் உதவி அளித்துக்கொண்டிருக்கிறது.

*Expectation of life.*

* 402 Q.—Sri S. LAZAR: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the normal expectation of life in Madras State in 1900;

(b) the same in 1957; and

(c) whether there is a proposal by the Government to increase the age of retirement from 55 to 60 years in accordance with the increase in the normal expectation of life?

9-20 a.m. The Hon. Sri C. SUBRAMANIAM: (a) & (b) Life tables are prepared by the Actuary, Government of India, at the time of Census and published along with the Census Reports. Census Reports have not been prepared for the years 1900 and 1957. The expectation of life at birth in Madras State in 1901 as given in the Census of India Report for 1931 and the expectation of life at birth in the South India Zone which includes Madras, Mysore, Travancore-Cochin and Coorg in 1951, as given in the Census Report for 1951, were as follows :—

| | 1901. | 1951. |
|---|---|---|
| Males .. .. | 26·21 years. | 36·22 years. |
| Females .. | 27·13 years. | 37·23 years. |

Therefore ladies live longer, Sir. (Laughter.)

(c) The age of retirement of Government servants has not been fixed on the basis of the normal expectation of life. The Government have also no proposal to increase the age of retirement of Government servants from 55 to 60 years.